மாம்பலம் குருகுல வெளியீடு.

# ஸ்ரீ சாரதா நவராத்ரி கதையும்
# ஸ்ரீ ஸரஸ்வதீ பூஜையும்.



ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

1964

க்ரோதி௵ ஆவணி௴ ]          [ விலை 50 பைசா.

ஸ்ரீராம ஜயம்
வைகாசி ஸ்ரீ 27 உ
அனந்தராமன்

# ஸ்ரீ சாரதா நவராத்ரி கதையும்
# ஸ்ரீ ஸரஸ்வதீ பூஜையும்.

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.


ஸ்ரீ லக்ஷ்மீ


ஸ்ரீ துர்க்கா


ஸ்ரீ ஸரஸ்வதீ

" மாம்பலம் குருகுல வெளியீடு "
2, ஸ்டேஷன் ரோடு, மேல மாம்பலம்,
சென்னை-33.

1964

க்ரோதிஹு ஆனிமீ] [விலை 50 ந. பை.

# ஸ்ரீ ஸரஸ்வதி பூஜா தத்வம்.

அறுபத்து நான்கு கலைகளுக்கு அதிஷ்டான தேவதை ஸரஸ்வதி என்பது ஒருபாலிருக்க, ஸரஸ்வதி பூஜை என்பது பரப்ரும்ம உபாஸனையாம். ஶப்த ப்ரும்மம், அர்த்த ப்ரும்மம் என பரப்ரும்மத்தைக் கூறுவர். ஶப்த வடிவமாகவும், வித்யா ரூபமாகவும், ஓங்காரரூபமாகவும் இருப்பது ஶப்தப்ரும்மம். அதன் அர்த்த ரூபமாக, ஆத்மரூபமாக இருப்பது அர்த்த ப்ரும்மமாகும். "தேவனும் தேவியும் வாக்கும் அர்த்தமுமாக இருக்கிறார்கள்" என தேவி பக்தனை கவிகுல திலகமான காளிதாஸன் "வாகர்த்தா விவ ஸம்ப்ருக்தௌ"— வாக்கும் அர்த்தமும் போல் சேர்ந்திருப்பவர் என வர்ணிக்கிறார். மற்றோரிடத்தில் "ஓங்கார, பஞ்சர ஶுகீம்"—ஓங்காரம் எனும் கூட்டில் கிளிபோல் இருக்கிறாள் தேவீ என்கின்றார். *பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ* என்ற நான்கு ரூபமாய் தேவியைப் புராணங்கள் கூறுகின்றன. *ஸர்வ சைதன்ய ரூபாம்தாம், ஆத்யாம் வித்யாஞ்ச தீமஹி, புத்திம் யாந ப்ரசோதயாத்'* ஸர்வ சைதன்யவடிவமாய் ஆதிவித்யையாயுமிருக்கும் தேவியை த்யானம் செய்கிறோம். எவள் நம் புத்தியைத் தூண்டுகின்றாளோ எனத் தெவி பாகவதம் மங்கள ஶ்லோகம் கூறுகிறது. வேதாந்த ஸூத்ரம் முதலில் "*ஶாஸ்த்ர யோனித்வாத்*" என்ற ப்ரும்ம ஸூத்ர பாஷ்யத்தில் பரமாசார்யாள் ஶாஸ்த்ரங்களுக்குக் காரணன். ஶாஸ்த்ரங்களால் காணத்தக்கவன்—பரமாத்மா என இருவகையாகக் கூறுகிறார். *ஶப்தப்ரும்ம மயீ, பரா பர மயீ* என்றும் தேவி வர்ணிக்கப்படுகிறாள். காந்தர்வ வேதத்தினால் உபாஸிக்கும் தியாகையரெனும் மஹநீயர் "*நாத தநு மநிஶம்*" என்றும், தமிழால் முருகனைப் போற்றும் அருணகிரிநாதர் "*நாத பிந்து கலாதீ நமோ நம, வேத மந்த்ர ஸ்வரூபா நமோ நம*" என்கிறார். ஆதலால் ஶப்த ப்ரும்மமாயும் அர்த்த ப்ரும்மமாயும்; நாதாந்தமாயும், வேதாந்த வேத்யமாயுமுள்ள பரப்ரும்மமே **ஸரஸ்வதி**. உண்மையை உணர்ந்து உபாசிப்போர் புக்தி முக்தி பெறுவர்.

# ஸ்ரீ சாரதா நவராத்ரி பூஜா விதி.

## ஸரஸ்வதீ பூஜை

வஸந்த சரத் என்று இரு ருதுக்களும் யமனது இரு கோரப் பற்களாம். யமனே பயங்கரமானவர். அதை விட அவர் கோரப்பல் மிகப் பயங்கரமானது. அச்சமயம் மக்களுக்கு உண்டாகும் துன்பம் பலவகை. நோய், மனக் கவலை, குடும்பத்தில் சண்டை, அகால மரணம், அபம்ருத் யுக்களும் ஏற்படும். அச்சமயம் உலகமாதாவான பரா சக்தியை பூஜிக்க வேண்டும். அன்னை, துன்பம் அனைத்தை யும் அகற்றுவாள். அவள் அருளால் கவலை அகலும், நன்மை உண்டாகும். ஸகோதரன், பிதா முதலியவரின் அன்பைவிட தாயின் அன்பே மிகச்சிறந்தது. தாய்க்கே சேயிடம் அன்பு விரைவில் சுறக்கும். சித் என்பது அன் னையின் அம்சம். அவள் எதையும் செய்ய வல்லவள். ஆதலின் அவளை ' சக்தி ' என்பர். அவள் ஸ்வந்தரமான வள். எங்கும் உள்ளவள். எல்லாமாக உள்ளவள். அவள் திருநாமம் சேராத பொருளே இல்லை. இச்சா சக்தி, க்ரியா சக்தி, க்ஞான சக்தி, தான சக்தி, கான சக்தி என பல கூறப்படும். சிலவிடத்தில் உபபதங்களை விட்டு சக்தி என்றே கூறப்படும். சிறியவனைப் பெரிய பொருளைத் தூக்கு எனில் சக்தி இல்லை என்பான். சக்தி இல்லையேல் சிவனும் சவம் எனப்படுவர். வேதம் கூறு வது சக்தியே. உபநிடதம் உரைப்பது சக்தியே. புரா ணம் போற்றுவது சக்தியே. ஆகமம் ஆதரிப்பதும் சக்தியே. கல்வியை ஸரஸ்வதி என்போம். செல்வம் லக்ஷ்மியாம். செயல் பார்வதியாம். இவர்கள் துர்க்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ என ஏகமாயும் தனித்தனியாகவும் பூஜிக்கப்படுவர்.

சாரதா நவராத்திரி ஆச்வின சுக்ல ப்ரதமை முதல் ஆரம்பம். முதல் நாள் அமாவாஸ்யை அன்று கஞ்சி வடிக்காத அன்னத்தை உண்டு உபவாஸம் இருக்கவேண்டும். அன்று பூஜைக்கு வேண்டிய பொருள்களைச் சேர்த்து வைத்துக்கொள்ளவேண்டும். அழகியமண்டபம் அமைத்து மாவிலை தோரணங்களால் அலங்கரிக்கவேண்டும். தேவீ பிம்பம் அமைப்பதானுல், 16 அல்லது 4 கரங்களுடன் இருக்கவேண்டும். அன்று இரவே ஸப்தஸதீ, தேவீ பாகவதம், வேதம் முதலியவைகளைப் பாராயணம் செய்ய ப்ராம்மணர்களை அழைக்கவேண்டும். ப்ரதமை காலையில் அவர்களைப் பாராயணம்செய்ய வரிக்கவேண்டும். செல்வமுள்ளவர் ப்ராம்மணர்களுக்கு மதுபர்க்க பூஜைசெய்து வரிக்கவேண்டும். மண்டபத்தினிடையே வேதியில் ஸிம்மாஸனம் அமைத்து தேவீவிக்ரஹம் அல்லது நவாக்ஷரீ சக்ரத்தை அமைக்க வேண்டும். நித்ய பூஜைக்காக தீர்த்தம் நிறைந்த ஒரு கலசம் பிரதிஷ்டை செய்ய வேண்டும். அதனுள் சக்திக்கேற்றபடி நவரத்னம் அல்லது ஸ்வர்ணமேனும் போடவேண்டும். மேலே மாந்துளிர், கூர்ச்சம், தேங்காய் முதலியன அமைக்கவேண்டும். "9 நாட்களும் சுத்த உபவாஸம் அல்லது ராத்ரி உபவாஸம் இருந்து பூஜை செய்கிறேன்! எனக்கு உதவி செய்!" என தேவியை வேண்டிக்கொண்டு பூஜையை ஆரம்பிக்க வேண்டும். வாத்யகோஷம், வேதகோஷம், வாஸனுத்ரவியம், நறுமணம் வீசும் மலர், பல்வகை பழம், தூபதீபம், சித்ரான்னம், அன்னதானம் இவை தேவிபூஜைக்குரியன. சிறந்தவைகள். ஹோமம் செய்ய குண்டம் அமைக்கவேண்டும்.

### கன்யா பூஜையும் பலனும்.

ஒவ்வொரு நாளும் கன்யகா பூஜைசெய்யவேண்டும். சக்தியுள்ளவர், முதல் நாள் ஒரு கன்யகை, மறு நாள்

இரண்டு, இதன்படி ஒவ்வொன்று அதிகமாகச் சேர்த்து பூஜை செய்ய வேண்டும், மற்றவர் தினம் ஒரு கன்யகை யாவது அர்ச்சித்தல் வேண்டும். முதல் நாள் 2 வயது கன்யகை. அவள் பெயர் **குமரிகா**. அப்பெயர் கூறி அர்ச்சிப்பதால் துக்கமும் ஏழ்மையும் அகலும். சத்ரு நாசம், செல்வம், ஆயுஸ், பலம் உண்டாகும். இரண்டாவது நாள் 3 வயது கன்யகை. அவள் **த்ரிமூர்த்தி** எனப் படுவாள். அவளைப் பூஜிப்போர் ஆயுஸ், தர்மம், அர்த்தம், காமம், தனம், தான்யம் முதலியன பெறுவர். மூன்றுவது தினத்தில் 4 வயதுள்ள பெண்ணைக் **கல்யாணி** என்ற பெயரால் பூஜிக்கவேண்டும். அதனுல் கல்வி, ஜயம், ராஜ்யம், ஸுகம் முதலியன உண்டாகும். நான்காவது தினம் 5 வயதுள்ளவளை **ரோஹிணி** என பூஜிக்கவேண்டும். அதனுல் ஸகல ரோகமும் அகலும். ஐந்தாவது நாள் 6 வயதுள்ள கன்யகையைக் **காளிகா** என்ற பெயரால் பூஜை செய்ய வேண்டும். அதனுல் சத்ரு அழிவான். ஆருவது தினத்தில் 7 வயதுள்ள கன்யா பூஜை **சண்டிகா** என்ற பெயரால் செய்ய வேண்டும். அதனுல் செல்வம் வளரும். ஏழாவது நாளில் 8 வயது பெண்ணை **சாம்பவீ** எனப் பூஜித்தவருக்கு அரசரும் வச்யமாவார். எட்டாவது தினத்தில் 9 வயது கன்யகையைத் **துர்க்கா** என அர்ச்சித்தால் துக்கம் அகலும், ஏழ்மை ஒழியும். க்ரூரமான சத்ரு அழிவான். வெற்றி உண்டாகும். ஒன்பதாவது நாளில் 10 வயது வாய்ந்த கன்யகையை **ஸுபத்ரா** என்ற பெயரால் அர்ச்சிக்கவேண்டும். அவள் விரும்பிய பயனை அளிப்பாள். 10 வயதிற்கு மேற்பட்டவள் பூஜிக்கத் தக்கவளல்ல. அங்கஹீனை, குஷ்டம், வ்ரணம், துர்க்கந்தமுள்ளவள், கண்ணில்லாதவள், துஷ்குலத்தில் பிறந்தவள், குரூபி, உடலில் ரோமம் நிறைந்தவள், நோயாளி முதலிய பெண்களைப் பூஜிக்கலாகாது. ப்ராம்மணருக்கு ப்ராம்மண கன்யகைதான் பூஜைக்கேற்றவள். 9 நாளும் பூஜிக்கச் சக்தியில்லாதவர் அஷ்டமி, நவமிகளிலாவது

அல்லது நவமியிலாவது அவசியம் தேவியைப்பூஜிக்க வேண்டும். தக்ஷயக்ஞத்தை அழித்த பத்ரகாளி அவதாரம் செய்த தினம் அஷ்டமி. ஸப்தமி, அஷ்டமி, நவமி இந்த 3 தினங்களிலும் உபவாஸமும் இருத்தல் வேண்டும். நவமியன்ருவது உபவாஸமிருந்து பூஜிக்க வேண்டும். முற்பிறவியில் பூஜை செய்யாதவரே இப்பிறப்பில் நோய், ஏழ்மை, மலடு, கவலை, வைதவ்யம் முதலிய துன்பத்திற்கு ஆளாவர். தேவி பூஜை, விசேஷமாக நவராத்ரி பூஜை செய்வோர் ஸகல பாக்யங்களையும் பெறுவர். முற்பிறவியில் செய்த மஹாபாபம் பலமாக இருந்தால்தான் நவராத்ரி பூஜைசெய்ய மனமிராது.

கோஸலநாட்டில் ஸுசீலர் என்ற ஒரு வைசியர் பரம தரித்ரனுக இருந்தார். பெயருக்கேற்ற ஒழுக்கமுள்ளவர். பெரிய குடும்பி. உண்ண உணவும் உடையுமின்றித் தவித்தார். பரம தார்மிகர், சாந்தர். பசி எனக் குழந்தைகள் அழும்போது தீ வாய்ப்பட்ட புழுபோல் தவிப்பார். எவரையும் கடிந்து பேசார். தன் கர்ம வினையை நினைத்து வருந்துவர். தற்செயலாக அவரிடம் வந்த ப்ராம்மணனை நாடி ஏழ்மை அகல ஒரு உபாயம் வேண்டினர். அவர் நவராத்ரி வ்ருதம், பூஜை இவைகளை உபதேசித்தார். இதற்கு ஈடான வ்ருதம் வேறில்லை. ஸ்ரீ ராமனும் ஸீதாதேவியை ராவணன் கொண்டு சென்றபோது நாரதர் உபதேசத்தால் கிஷ்கிந்தையில் நவராத்ரீ வ்ருதம் செய்தார். அஷ்டமிஇரவில் தேவி, ராமன் எதிரில் தோன்றி "ராவண வதம் செய்து ஸீதையைப் பெறுவீர்" என ஆசீர்வதித்தாள். ராமன் நவராத்ரி பூஜா மஹிமையால் பூர்ண வெற்றி பெற்ருர். (இது ஸ்ரீ தேவீ பாகவதம் மூன்ருவது ஸ்காந்தம் 26, 27 அத்தியாயங்களில் கூறப்பட்ட பூஜா விதி.)

நூற்றுக்கணக்கான தேவி தந்த்ரங்கள் உள. அவைகளில் கூறப்பட்டதைக் கொண்டு பற்பலவிடங்களில் பல

வகையாகப் பூஜை செய்யப்பட்டு வருகிறது. முக்யமாக இந்த 9 நாட்களும் மிகச் சிறந்த நாட்கள். 4 வேத பாராயணம், ஸ்ரீ தேவீ பாகவதம், ஸப்த சதி, ஸ்ரீமத் ராமாயணம் முதலிய ஸகல பாராயணங்களையும் நடத்துபவர் சிலர். சக்திக்கும் பக்திக்கும் ஏற்றபடி இவைகளில் சிலவற்றை நடத்துபவர் சிலர். ஸ்ரீ சக்ரத்தில் நவாவரண பூஜை செய்வோர் சிலர். ஸ்ரீவித்யா ஹோமம் செய்பவர் சிலர். மற்றும் பற்பல வகையிலும் பூஜை செய்பவர் பலர். தக்ஷிண தேசத்தில் **நவராத்திரி** என்றும், கர்நாடக தேசத்தில் தசராத்ரி என்றும், வங்கத்தில் காளி பூஜா என்றும் அழைக்கப்படுகிறது. சத்ருவைக்கொன்று பக்தருக்கு இன்பம் அளிப்பதாகக் கொள்கை. சில புராண ப்ரமாணங்களைக் கொண்டு இச்சமயம் மஹிஷாஸுரனைக் கொன்று தேவருக்கு ஸ்வர்க்கத்தைத் தந்தாள் எனவும் தெரிகிறது.

## மஹிஷாஸுர மர்த்தினீ.

தநு என்பவருக்கு ரம்பன், கரம்பன் என இருபுத்ரர்கள் உண்டாயினர். இவர்கள் தங்களுக்குப் புத்ரபாக்யமின்மையால் தவம்புரிந்தனர். கரம்பன் நீரிலும் ரம்பன் தீயின் இடையிலும் இருந்து கடுந்தவம் செய்தார்கள். பஞ்சநத ஜலத்திலுள்ள கரம்பனைச் சக்ரன் முதலை உரு கொண்டு கொன்ருன். இதை அறிந்தான் ஸகோதரனை ரம்பன். ரஸால வடத்தினருகே தன் தலையை அறுத்து அக்னிக்கு அர்ப்பணம் செய்யக் கருதினன். "தற்கொலை மிகப்பாவம்! வேண்டிய வரனைக் கேள்! அளிப்போம்!" என்ருர் அக்னி. "அப்படியானல், ஸோதரனைக் கொன்ற இந்த்ரனை அடக்கும்படியான மகனை அளியும்!" என்ருன் அரக்கன். முதலில் "எந்த ஸ்த்ரீயிடம் காமனை கொள்கிருயோ அவளிடம் அத்தகைய புதல்வன் பிறப்பான்!" என வரமளித்தார். அங்கிருந்து கிளம்பிய ரம்பன் மனம், ஒரு எருமையிடம்

சென்றது. அங்கு கர்ப்பாதானம் செய்தான். இதைக் கண்டு வேறொரு எருமை சினங்கொண்டு, ரம்பனைக் கொன்றது. தன் ஜாதியில் ராக்ஷஸர் நுழைய இடமளித்த பெண் எருமையையும் தொடர்ந்து ஓடிற்று. அது ரம்பன் தவம் செய்தவிடத்திலுள்ள யக்ஷரைச் சரண் புகுந்தது. யக்ஷருக்கும் அவ்வெருமைக்கும் போர் நடந்தது. அதைக் கொன்று யக்ஷர் பெண் எருமையைக் காத்தனர். இவ்வெருமை ஸதியைப்போல் பதி உடலை எரித்து உடன் கட்டை ஏறிற்று. யக்ஷர் பலர் தடுத்தனர். கர்ப்பிணி தீக்குளிக்கலாகாது என்றனர். கற்புள்ள அந்த எருமை அதைக் கேளாது தீயில் விழ, மஹிஷாஸுரன் அங்கிருந்து பிறந்தான். ரம்பனும் ரக்தபீஜன் என்ற அஸுர உடல் எடுத்து மஹிஷனுடன் குலகுருவான சுக்ரரை அண்டினான். அவர் கூறியபடி பத்தாயிரமாண்டு இமய மலையில் மஹிஷன் தவம் செய்தான். ப்ரும்மா ப்ரத்யக்ஷமாகி, "யாது வரம் வேண்டும்?" என, "சாகாத வரமளியும்!" என்றான். "அது இயலாத காரியம்! வேண்டுமாயின் ஒன்றைத் தவிர மற்றவைகளால் மரணம் இல்லை எனக் கேள்!" என்றார் ப்ரும்மா. "அரிய ஒரு அபலை மூலமே மரணம் வரலாம்!" என வரம் பெற்றான். அடுத்த நிமிஷம் சக்ரனைச் சண்டைக்கு இழுத்தான். போர் பல நாள் நடந்தது.

ஸ்கந்தன், விஷ்ணு, சிவன் முதலான ஸகல தேவரும் சக்ரனுக்கு உதவி புரிந்தனர். தாம்ப்ரன், ரக்தபீஜன், அந்தகன் முதலிய அரக்கர் மஹிஷனுக்கு உதவி புரிந்தனர். இந்த்ரனது வஜ்ராயுதம் தூள் தூளாயிற்று. சக்ரபாணியின் சக்ரமும், கதையும், சிவன் சூலமும் பயனற்றுப் போயின. முடிவில் மஹிஷனே வெற்றி பெற்றான். அமரர் உயிர்தப்பி ஓடி ஒளிந்தனர். இந்த ஸ்திதியைக் கண்ட ஹரி, ஹர, பிரும்மா எனும் மும்மூர்த்திகளும் ஒன்றுகூடி யோசித்தனர். மஹிஷனைக் கொல்ல

வல்லமைவாய்ந்த அபலை இல்லை! நம் தவத்தால் ஒருவளை உண்டு பண்ணுவோம்! என எண்ணினர். அமரர் அனைவரும் ஓரிடத்தே அசைவற்று அமர்ந்து அன்னையை த்யானம் செய்தனர். ஒவ்வொருவர் உடலிலிருந்தும் தேஜஸ் கிளம்பி ஒரே ஜ்யோதிர் மண்டலமாயிற்று. பின்னர் சிவசக்தி முகமாகவும், மற்றவர் மற்ற அங்கங் களாகவும் அமைந்தனர். அரிய உடலெடுத்த அன்னைக் குத் தம் தம் ஆயுதங்களைத் தந்தனர். 18 கரங்களிலும் அவைகளை ஏந்தி, தேவி அட்டஹாஸம் செய்தாள். இதனைக் கேட்ட மஹிஷன் வியந்து தூதனை அனுப்பினான். அவள் உருவைக் கண்ட அசுரர் மஹிஷனை நாடி, "உனக் கேற்ற மஹிஷி அவள்!" என்றனர். அரக்கனும் அன் னையைப் பெண்ணாகக் கருதினான். போர்வீரர் பலரை அனுப்பினான். அனைவரும் அன்னையால் கொல்லப்பட்ட னர். மந்த்ராலோசனை செய்ய சபை கூட்டினான். மஹிஷ னது மனதிற்கு இசைந்தபடி பலர் பேசினர். ஓரிருவர் இவன் பெற்ற வரத்தை நினைவூட்டி, அன்னை திருவடியைச் சரணடையும்படிக் கூறினர். அழிவுவரும் பின்னே அறிவு கெடும் முன்னே! மஹிஷன் போரிலிறங்கினான். பற்பல நயமான சொற்களைக்கூறி, தன்னை மணக்கும்படி வேண்டி னான். மாயையால் பல ரூபமெடுத்து மயக்கினான். முடி வில் தேவியின் வாளுக்கிரையானான். கருணைக்கடலான அன்னை, அவனும் நற்கதி பெற அவன் சிரத்தில் தன் திருவடிகளை வைத்து நின்றாள். அந்த உருவம் ஒவ்வொரு ஆலயத்திலும் மூலஸ்தான சுவற்றின் வெளியே வடபுறத் தில் காணப்படும். அமரர் அனைவரும், "துர்கே! மஹிஷா ஸுர மர்த்தினீ!" எனப் பலவகையாகப் போற்றிப் புகழ்ந்தனர். இந்த உபாக்யானம் தேவீ பாகவதத்தில் விஸ்தாரமாகவும், மார்க்கண்டேயம் முதலிய புராணங் களில் சுருக்கமாகவும் கூறப்படுகிறது.

## தத்வார்த்தம்.

மஹிஷம் என்பது தமோகுணத்தால் உண்டாகும் அக்ஞானம். தமஸ் கறுப்பு, எருமை கறுப்பு. தமஸால் ஆலஸ்யமும், நித்ரையும் உண்டாகும். எருமையோ வெகு நிதானமாகச் செல்லும். சேரில் அமிழ்ந்து ரஸிக்கும். அக்ஞானி தானும் கெட்டுப் பிறரையும் கெடுப்பான். எருமை சாணிமீது மூத்ரம்பெய்து அதை வாலால் கலக்கி, தன் மீதும் பிறர் மீதும் தெளிக்கும். அக்ஞானி இன்னது செய்வான் எனக் கூறமுடியாது. சண்டி முறண்டால் காடு கொள்ளாது. அந்த அக்ஞானம் மெய்க்ஞானத்தால் தான் அகலும். ஸ்ரீ தேவியே ஸ்ரீ வித்யா, ப்ரும்ம வித்யா, ஆத்ம வித்யா ஸ்வரூபிணீ. அவளது அருள் பெற்ருேருக்கு அக்ஞானம் அகலுவது ஸுலபம்.

## நவராத்ரி கொலு தத்வம்.

ஆலயங்களில் அம்பிகையின் விக்ரஹம் ஒரு கொலு மண்டபத்தில் வைத்து அலங்கரிக்கப்படும். வீடுகளில் பலவகை பொம்மைகளை வைத்து அலங்காரம் செய்வர். கன்யகைகள் பலவகை அலங்காரம் செய்துகொண்டு வீடு வீடாகச் சென்று, சக்திவடிவான பெண்களை மஞ்சள் குங்குமம் பெற அழைப்பர். பலர் பாடுவர். வந்த பெண்களுக்குச் சந்தனம், தாம்பூலம், மஞ்சள், குங்குமம், சுண்டல், பழம் வினியோகிக்கப்படும். மஹிஷனுல் பிடிக்கப்பட்ட அமரர் ஏகாந்தமாக அமர்ந்து அன்னையை மனதிலே இறுத்தித் துதித்த ஐதிஹ்யமே கொலு, ஸுவாஸனீ பூஜையாம். அன்னை 64 கலா வடிவம். 64 உபசாரத்திற்கேற்றவள். பெண்கள் அலங்காரம், கொலு அலங்காரம், பாட்டு, கோலாட்டம் முதலியன அம்பிகையின் ஆராதனமாகச் செய்யப்படுகின்றன. ஆண் மக்களோ வேத பாராயணம், ஸ்ரீதேவீ பாகவத ஸப்த சதீ பாராயணம், ஹோமம், ஆவரண பூஜை இவைகள் மூலம் ஆராதிக்கின்றனர். எல்லா வித்யைகளும் ஏகரூபமான அத்வைத

வடிவமான அன்னையை ஆதரித்து, ஜனன மரண சோக மோஹத்தை அளிக்கும் அக்ஞானத்தை அகற்ற வழி காட்டுகின்றன. தேவியோ க்ஞான சக்தி, இச்சா சக்தி, க்ரியா சக்தி ஸ்வரூபிணி. செல்வத்திற்குத் தேவி–இச்சா சக்தி, அறிவுக் கடவுள்–ஸரஸ்வதி, கார்ய சக்தி–பார்வதி. இவர்களையே துர்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதி என்ற முறையில் பூஜிக்கின்றோம். பாபநாசம்–துர்க்கையால், தெய்வ ஸம்பத்–லக்ஷ்மியால், க்ஞானம்–ஸரஸ்வதியாலும் பெற வேண்டும், என இப்படி க்ரமம் அமைக்கப்பட்டது. க்ஞானம் உண்டானல் வேறு என்ன வேண்டும்? க்ஞானம் வாழ்க்கைக்கு ஸாதனம். உடலுக்கும் உயிருக்கும், இம்மைக்கும் மறுமைக்கும் ஸாதனம். அறிவே அன்னமளிக்கின்றது ஸ்தூல உடலுக்கு. அறிவே ஸூக்ஷ்ம உடலுக்கும் உணவூட்டுகிறது! ஆதலின் யார் எதைக்கொண்டு ஜீவிக்கின்றனரோ அதையே மஹாநவமியன்று பூஜிப்பர். அது ஆயுத பூஜை எனப்படும். வண்டிக்காரன் வண்டியையும், ரயிலோட்டி இஞ்ஜினையும், கம்மாளர் சுத்தி பட்டரையையும் பூஜிப்பர். ஆஸேது ஹிமாசலம் வரை ஸகல வகுப்பினராலும் செய்யப்படும் பூஜை இது. முதல் 3 நாள் துர்காபூஜை அஷ்டோத்ர சதநாமார்ச்சனை, இரண்டாவது 3 நாள் லக்ஷ்மீ, 3 வது 3 நாள் ஸரஸ்வதி, எல்லா திநத்திலும் துர்கா அல்லது லலிதா ஸஹஸ்ர நாமார்ச்சனை, லக்ஷார்ச்சனையும் செய்யலாம். முறையே 100 ஸஹஸ்ர நாமார்ச்சனை 9 நாளில் திநம் கொஞ்சமாகச் செய்யலாம். முடிவில் சண்டி அல்லது ஸ்ரீவித்யா ஹோமம் செய்யவேண்டும். அறிந்தவர்களைக் கொண்டு செய்யவும். ஸ்ரீஸூக்த பாராயணம், பஞ்சதசாக்ஷரீ ஜபம் விசேஷமானது. ஸுவாஸினீ பூஜை மிக முக்யமானது.

## விஜய தசமி.

அன்னை அரக்கனைக் கொன்று வெற்றிபெற்ற தினம் விஜயன் எனும் அர்ஜுனன் விராட நகரத்திலிருந்து

கிளம்பி, வன்னிமரத்திலிருந்து ஆயுதமெடுத்த தினமிது. வெற்றிதரும் விஜயதசமியில் அவரவர் தொழிலை ஆரம்பிப்பர். முக்யமாக சிறுவர்களுக்கு அக்ஷராப்யாஸம் அன்று ஆரம்பிக்கப்படும். வேத, வேதாந்த, தர்ம, பக்தி, புராணாதி கல்விகளைப் போதிக்கும் நமது வைதிக தர்ம வர்த்தினியும் ஸர்வஜித்ஸு விஜயதசமியன்று ஆரம்பிக்கப்பட்டது. அது நல்லநாள் ஆதலால் மரணயோகமாகவோ, செவ்வாய் சனிக்கிழமையாகவோ இருந்தாலும் கவனிப்பதில்லை. ஆலயங்களில் அன்று அம்பு போடும் ஐதிஹ்யம் நடைபெறும். அரசர், (விசேஷமாக மைசூர் அரசர்) தர்பார் கூட்டி, மாலையில் அம்பெய்யச் செல்வது வழக்கம். மஹிஷாஸுர மர்த்தனம் மைசூரில் நடந்தது என்றும், அது மஹிஷாஸுரபுரமாக இருந்தது என்றும் சிலர் கூறுவர். பொதுவாகக் கூறுமிடத்தில் 64 கலைகளையும் ப்ரசாரம் செய்யும் ஸ்ரீ வித்யா வாரம் நவராத்ரி. சிவராத்ரிபோல் நவராத்ரியிலும் ராத்திரி பூஜை விசேஷம்.

சரணாகத ஜனதாகில துரிதாபஹ சரணே
மஹிஷாஸுர பயகாதர விபுதாவன நிபுணே।
வருணாலய தனயா ஸக முக தெய்வத வினுதே
கருணாம் குரு பரமாம்மயி க்ருபணே ஹரதயிதே॥

---

## துர்கா-லக்ஷ்மீ-ஸரஸ்வதி பூஜை.

[குறிப்பு:-முதலில் எல்லாவற்றையும் இரண்டொரு முறை நன்கு படித்துவிட்டு, வேண்டிய ஸாமக்ரிகளை எடுத்து அருகில் வைத்துக்கொண்டு, பிறகு பூஜைசெய்ய ஆரம்பிக்கவேண்டும். வருஷ மாஸ திதி வார நக்ஷத்ரங்களைப் பஞ்சாங்கத்தைப் பார்த்துக் கூறவேண்டும்.]

ஶுக்லாம் பரதரம் விஷ்ணும்-ஶஶிவர்ணம் சதுர்புஜம்।
ப்ரஸன்ன வதநம் த்யாயேத்-ஸர்வ விக்னோபஶாந்தயே॥

ஓம்பூ:—ஸுவரோம். மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத் வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம் கரிஷ்ய மாண ஸ்ய கர்மண: அவிக்னேன பரிஸமாப்த்யர்த்தம் ஆதௌ மஹா கணபதி பூஜாம் கரிஷ்யே ||

என ஸங்கல்பம் செய்து, கை அலம்பி, மஞ்சள் பிள்ளையாரில் விக்னேஶ்வரரை ப்ரதிஷ்டை செய்து, ஷோடசோபசார பூஜை செய்யவேண்டும். வேதம் அறிந்தவர் கணானாம்த்வா என்ற மந்த்ரத்தைக் கூறி ஆவாஹனம் செய்யவேண்டும். மற்றவர் கீழ்க் கண்டபடி செய்யவேண்டும்.

அஸ்மின் ஹரித்ரா பிம்பே ஸுமுகம் விக்னேச்வரம் த்யாயாமி, ஆவாஹயாமி. ஆஸனம் ஸமர்ப்பயாமி. (அக்ஷதை போடவும்) பாதயோ: பாத்யம் ஸமர்ப்பயாமி. ஹஸ்தயோ: அர்க்யம் ஸமர்ப்பயாமி. ஆசமனீயம் ஸமர்ப்பயாமி. (தனிப் பாத்ரத்தில் இம் மூன்றிற்கும் ஒவ்வொரு உத்தரணி தீர்த்தம் விடவேண்டும்) ஸ்நாபயாமி. **ஆபோஹிஷ்டா** என்ற மந்த்ரம் கூறி, புஷ்பத்தை ஜலத்தில் தோய்த்து ப்ரோக்ஷிக்க வேண்டும். ஸ்நானானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி. வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி. உப வீதார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி. கந்தான் தாரயாமி. (சந்தன மிடுக) கந்தஸ்யோபரி அக்ஷதான் ஸமர்ப்பயாமி. புஷ்பை: பூஜயாமி (அர்ச்சனை) ஸுமுகாய நம: ஏகதந்தாய நம: கபிலாய நம: கஜகர்ணகாய நம: லம்போதராய நம: விகடாய நம: விக்ந ராஜாய நம: விநாயகாய நம: தூம்ரகேதவே நம: கணாத்யக்ஷாய நம: பாலசந்த்ராய நம: கஜானனாய நம: வக்ரதுண்டாய நம: சூர்ப்பகர்ணாய நம: ஹேரம்பாய நம: - தூபம் ஸமர்ப்பயாமி. (சாம்ப்ராணி அல்லது ஊதுவத்தி) தீபம் ஸமர்ப்பயாமி. தூபதீபார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி. பூர்புவஸ்ஸுவ: (நைவேத்ய வஸ்துவை ஜலத்தால் ப்ரதக்ஷிணம் செய்து காயத்ரியால் ப்ரோக்ஷித்து) தேவஸவிதப்ரஸுவ:,

ஸத்யம் துர்த்யேன பரிஷிஞ்சாமி (என ஆஹாரகாலத்தில் செய்வதுபோல் சுற்றி) அம்ருதோபஸ்தரண மஸி— ப்ராணாய ஸ்வாஹா, அபாநாய ஸ்வாஹா, வ்யாநாய ஸ்வாஹா, உதாநாய ஸ்வாஹா, ஸமாநாய ஸ்வாஹா, ப்ரம்மணே ஸ்வாஹா விக்நேச்வராய நம: குடம் (வெல்லம்) (வாழைப்பழமானல்) கதலீபலம் நிவேதயாமி.

அம்ருதாபிதானமஸி. நைவேத்யாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி, பூகீபல ஸமாயுக்தம் நாகவல்லி தளைர் யுதம், கர்ப்பூர சூர்ண ஸம்யுச்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்ய தாம். கர்ப்பூர தாம்பூலம் ஸமர்ப்பயாமி.

கர்ப்பூரம் (வேதம் அறிந்தவர் 'ஸோமோவா' எனக் கூறுக.) மற்றவர்: கர்ப்பூர நீராஜனம் ஸமர்ப்பயாமி. மந்த்ர புஷ்பம் ஸமர்ப்பயாமி. ஸுவர்ண புஷ்பம் ஸமர்ப்ப யாமி. (தக்ஷிணை வைக்கவும்) ப்ரதக்ஷிண நமஸ்காரான் ஸமர்ப்பயாமி.

## ப்ரார்த்தனே.

வக்ர துண்ட மஹாகாய ஸூர்யகோடி ஸமப்ரப ।
அவிக்னம் குருமே தேவ ஸர்வ கார்யேஷு ஸர்வதா ॥

(யானைமுக முள்ளவரே, பெருஞ் சரீரமுடையவரே, கோடி ஸூர்யனுக்கு ஸமமான காந்தி உள்ளவரே, தேவரே, எல்லா கார்யத்திலும் எப்போதும் எனக்கு விக்னமில்லாமல் இருக்கட்டும்)

## ஸரஸ்வதீ பூஜா ஸங்கல்பம்.

(அக்ஷதையைக் கையில் எடுத்துக்கொண்டு) சுக்லாம்—சாந்தயே, ஓம்பூ:-ஸுவரோம்) (வலது துடைமீது இடது கை தாழவும் வலது கை மேலாகவும் வைத்துக் கொண்டு) மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீத்யர்த்தம் (ஸ்ரீ வைஷ்ணவாள் விஷ்வக் ஸேன பூஜைசெய்து, ஸ்ரீ பகவதாக்ஞயா, ஸ்ரீ நாராயண ப்ரீத்யர்த்தம்) சுபே சோபனே முஹூர்த்தே, ஆத்ய ப்ரும்மண: த்விதீயே பரார்தே ஶ்வேத வராஹ கல்பே,

வைவஸ்வத மன்வந்தரே, கலியுகே ப்ரதமே பாதே ஜம்பூ த்வீபே பாரத வர்ஷே பரதகண்டே மேரோ: தக்ஷிணே பார்ச்வே சகாப்தே அஸ்மின் வர்த்தமானே வ்யாவ ஹாரிகே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும் மத்யே .... நாமஸம்வத்ஸரே தக்ஷிணயனே வர்ஷர்தெள ...... மாஸே சுக்லபக்ஷே நவம்யாம் சுபதிதெள ....... வாஸர யுக்தா யாம், ........ நக்ஷத்ர யுக்தாயாம் ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் நவம்யாம் சுபதிதெள தர் மார்த்த காம மோக்ஷ சதுர்வித பல புருஷார்த்த ஸித்யர்த் தம் ஸகல வித்யா பாரங்க தத்வ ஸித்யர்த்தம் ஸ்ரீ துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீ ப்ரஸாத ஸித்யர்த்தம் வர்ஷே வர்ஷே ப்ரயுக்த துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீ பூஜாம் யாவச்சக்தி த்யான ஆவாஹனுதி ஷோடசோ உபசாரை: கரிஷ்யே. (அக்ஷதையை வடக்கு புறம் எறிந்துவிட்டு ஜலத்தைக் கையால்தொட்டு) கணும்த்வா—ஸுமுகம் விக்கேஶ்வரம் யதா ஸ்தானம் ப்ரதிஷ்டாபயாமி. க்ஷேமார்த்தே புனரா கமனுய ச. (விக்னேஶ்வரரை வடபுறமாக நகர்த்திவிட்டு அந்த புஷ்பத்தை அணிந்து அக்ஷதையைத் தலையில் போட்டுக்கொள்ள வேண்டும்.) தேச காலத்தைக் கூறி நான்கு புருஷார்த்தமும் கல்வியும் உண்டாக ஸரஸ்வதி பூஜை செய்கிறேன் எனப் பொருள். (புஸ்தகங்களைக் கிழக்கு அல்லது வடக்கு முகமாகக் கோலமிட்ட மணை மீது வைத்து பூஜை செய்யவேண்டும்.)

## மணி அடிக்க மந்த்ரம்.

ஆகமார்த்தம் து தேவானும் கமனார்த்தம் து ரக்ஷஸாம் ।
கண்டாரவம் கரிஷ்யாமி தேவதாஹ்வான லாஞ்சனம் ॥

என்ற மந்த்ரம் கூறி மணி அடிக்கவும்.

(தேவர் வரவும் அஸுரர் அகலவும் தேவரைக் கூப்பிடுவதற்கு அடையாளமான மணி சப்தம் செய்கிறேன். மணியை அடித்து ஒரு ஆஸனத்தின்மேல் அதை வைக்கவேண்டும்.)

## கலச பூஜை.

(தீர்த்த பாத்திரத்திற்கு 4 புறமும் சந்தனமிட்டு, நடுவில் ஒரு புஷ்பத்தைப் போட்டு கையால் மூடிக்கொண்டு ஜபிக்கவெண்டும்.)

கலஶஸ்ய முகே விஷ்ணு: கண்டே ருத்ர: ஸமாஸ்ரித:
மூலே தத்ர ஸ்திதோ ப்ரும்மா மத்யே மாத்ரு கணும்ஸ்ருத:
குக்ஷௌது ஸாகராஸ் ஸர்வே ஸப்தத்வீபா வஸுந்தரா
ரிக்வேதோத யஜுர்வேத: ஸாமவேதோப் யதர்வண:
அங்கைச்ச ஸஹிதாஸ் ஸர்வே கலசாம்பு ஸமாஸ்ரிதா:
ஆயாந்து வாணீ பூஜார்த்தம் துரித க்ஷயகாரகா:
கங்கேச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதி
நர்மதே ஸிந்து காவேரீ ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு ||

(பொருள் :— கலசத்தின் முகத்தில் விஷ்ணு, கழுத்தில் ருத்ரன், வயிற்றில் எல்லா சமுத்ரங்களும், இடையில் மாத்ருகணங்களும் இருக்கிறார்கள். வயிற்றில் எல்லா சமுத்ரங்களும், ஏழு தீவிபங்களுடன் கூடிய பூமியும், ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் அங்கங்களுடன் கூடிய எல்லாம் கலச ஜலத்தை அண்டி பாபத்தைப் போக்கி, ஸரஸ்வதி பூஜைக்காக இங்கு வரட்டும். ஹே கங்கே ! யமுனே! கோதாவரீ ஸரஸ்வதீ ! நர்மதே ! ஸிந்தோ ! காவேரீ ! இந்த தீர்த்தத்தில் ஸான்னித்யம் செய். — பிறகு கலச ஜலத்தைப் புஷ்பத்தால் தன்னையும் பூஜா த்ரவியங்களையும் ப்ரோக்ஷிக்கவேண்டும்.)

## த்யானம்.

சதுர் புஜாம் மஹாதேவீம் வாணீம் ஸர்வாங்க ஸுந்தரீம்
ஸ்வேத மால்யாம் பர தராம் ஸ்வேத கந்தா நு லேபனும்
ப்ரண வாஸன ஸம்ரூடாம் ததர்த்த த்வேன நிஸ்சிதாம்
ஸிதேன தர்ப்பணுபேந வஸ்த்ரேண பரிபூஷிதாம்
ஸப்த ப்ரஹ்மாத்மிகாம் தேவீம் ஶரச்சந்த்ர நிபானனும்.
அங்குசம் ச அக்ஷ ஸூத்ரம் ச பாஶம் வீணும் ச தாரிணீம் |
முக்தாஹார ஸமாயுக்தாம் தேவீம் த்யாயேத் சதுர்புஜாம் ||

(பொருள்:—நான்கு கைகள் உள்ளவள் மஹாதேவீ. வாணி, எல்லா அங்கமும் அழகுள்ளவள். வெள்ளை வஸ்த்ரமணிந்து வெண் சந்தணம் பூசியிருப்பவள். ஓங்காரமெனும் ஆஸனத்தில் அமர்ந் தவள். பிரணவ அர்த்தமென நிச்சயிக்கப்பட்டவள். வெண்மை யான கண்ணாடி போன்ற ஆடையால் அலங்கரிக்கப்பட்டவள். சப்த ப்ரஹ்ம வடிவமான தேவி. சரத் கால சந்த்ரன்போன்ற முகம் உள்ளவள். அங்குசம், ஜபமாலை, பாசம், வீணை இவைகளைத் தரித்தவள். முக்தா ஹாரத்துடன் கூடியவளான ஸரஸ்வதியை த்யானம் செய்யவேண்டும்.)

வேதம் அறிந்தவர், **ஜாதவேதஸே, ஸக்துமிவ, ப்ரணோ தேவீ** என்ற மந்த்ரங்களைக் கூறி ஸரஸ்வதீ ஆவாஹனம் செய்து ப்ராண ப்ரதிஷ்டை செய்யலாம்.

கீழ்வரும் ஶ்லோகத்தைக் கூறி ஆவாஹனம் செய்யவேண்டும்.

அத்ராகச்ச ஜகத் வந்த்யே ஸர்வ லோகைக பூஜிதே ।
மயா க்ருதாம் இமாம் பூஜாம் க்ருஹாண ஜகதீஶ்வரீ ॥

(துர்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீம் ஆவாஹயாமி.)

(உலகில் பூஜிக்கத்தக்கவளே, ஸகல உலகத்தாலும் முக்யமாக பூஜிக்கப்பட்டவளே, ஜகதீச்வரீ, நான் செய்யும் பூஜையை ஏற்றுக் கொள்.)

ஶுக போத கராம் போஜே—ஸர்வாவயவ ஸுந்தரீ ।
சதுர்முக ப்ரியே தேவி—ஆஸனம் ப்ரதி க்ருஹ்யதாம் ॥

(துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வத்யை நம:
ஆஸனம் ஸமர்ப்பயாமி.)

(கிளிக் குஞ்சுள்ள கராரவிந்த முள்ளவளே, எல்லா அவய வங்களிலும் அழகுள்ளவளே, ப்ரும்மாவுக்கு ப்ரியமான தேவியே ! ஆஸனமேற்றுக்கொள்) என்று பஞ்சினுல் செய்த ஆஸனம் அல்லது ஆஸனார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி என அக்ஷதையைப் போட வேண்டும்.

பாத்யம் ஆத்யந்த ஶூன்யாயை வேத்யாயை வேத வாதிபி: | அத்யதேகலயாம்யேதத் ப்ரீத்யர்த்தம் ப்ரதிக் ருஹ்யதாம் ||

(துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீப்யோ நம:
பாத்யம் ஸமர்ப்பயாமி.)

(ஆதி, அந்தம் இல்லாதவளும், வேதியரால் அறியத்தக்கவளு மான உனது ப்ரீதியின் பொருட்டு கால் அலம்ப ஜலம் தருகிறேன் என்று கூறி ஒரு உத்தரிணி தீர்த்தத்தைத் தனியானதொரு பாத் ரத்தில் விடவேண்டும். அர்க்யம், ஆசமநீயம், நிவேதன ஜலம் எல்லாம் அப்படியே.)

கங்கா யமுன தோயேன நிர்மிதம் ச ஸுவாஸிதம் |
பக்த்யா ஸமர்ப்பிதம் வாணி க்ருஹாணார்க்யம் ஶுபாநநே

(துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீப்யோ நம:
அர்க்யம் ஸமர்ப்பயாமி.)

(கங்கை, யமுனை தீர்த்தத்தால் நிர்மாணம் செய்யப்பட்டதும் வாஸனையுள்ளதுமான அர்க்யமளிக்கிறேன், ஏற்றுக்கொள்.)

மயாதத்தம் இதம் தேவி க்ருஹாண ஆசமநியகம் |
சாரதே சாரத அப்ராபே ஸர்வவித்யாதி தேவதே ||

(துர்க்கா லக்ஷ்மீ ஸரஸ்வத்யை நம:
ஆசமநீயம் ஸமர்ப்பயாமி.)

(சரத்கால மேகம்போல் வெளுத்த திருமேனி உள்ள ஓ ஸரஸ்வதியே! ஸர்வ வித்யைக்கும் தேவதையே! ஓ சாரதே! நான் அளித்த அர்க்யத்தை ஏற்றுக்கொள்.)

ததிக்ஷீர ஸமாயுக்தம் கதளீ பல ஸம்யுதம் |
மதுபர்க்கம் மயாதத்தம் க்ருஹாண வரதா பவ: ||

(துர்க்கா லக்ஷ்ம்யை நம: மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி)

தயிர் பாலுடன் கூடியதும், வாழைப்பழத்துடன் கூடியது மான மதுபர்க்கத்தை ஏற்று வரமளிப்பாய்.)

பலக்ஷீர க்ருதைர் மிஶ்ரம் சர்கராமது ஸம்யுதம் ।
பஞ்சாம்ருத ஸ்னானமிதம் க்ருஹாண பரமேச்வரீ ॥

துர்க்கா லக்ஷ்ம்யை நம: பஞ்சாமிர்த ஸ்நானம் ஸமர்ப்பயாமி.

(பழம், பால், நெய், சர்க்கரை, தேன் இவை கலந்த பஞ்சாம்ருத ஸ்னானத்தை ஏற்றுக்கொள் என்று சொல்லி, பஞ்சாம்ருதத்தால் ஸ்நானம் செய்விப்பதுபோல் பாவனை செய்யவேண்டும்.)

நமஸ்தே ஹம்ஸ வாஹின்யை நமஸ்தே தாத்ரு பத்நிகே ।
கந்தோதகேன ஸம்பூர்ணம் ஸ்னானம்சப்ரதிக்ருஹ்யதாம் ॥
(துர்காலக்ஷ்ம்யைநம: கந்தோதக ஸ்னானம் ஸமர்ப்பயாமி)

(ஹம்ஸத்தை வாஹனமாகக் கொண்டவளே! உமக்கு நமஸ்காரம். ப்ரும்ம பத்னியே! உமக்கு நமஸ்காரம். வாசனை ஜலத்துடன் கூடிய ஸ்னானத்தை ஏற்றுக்கொள். ஜல ஸ்னானம் செய்விப்பதும் பாவனையே.)

சுவர்ண கலசாநீதை: நானுகந்த ஸுவாசிதை:
சுத்தோதகைஸ்சஸுஸ்னானம் கர்த்தவ்யம் விதிபத்னிகே ॥
(துர்காலக்ஷ்ம்யைநம: ஶுத்தோதக ஸ்னானம் ஸ—மி)

(ஓ ப்ரும்ம மனைவியே! சுவர்ண கலசத்தால் கொண்டு வரப்பட்டு, பல வாஸனை நிறைந்த ஶுத்த ஜலத்தால் ஸ்னானம் செய்யுங்கள். இதுவும் ஸ்னான பாவனை.)

(ஸ்னானனந்த்ரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி.)
(ஒரு உத்தரணி தீர்த்தம் பாத்திரத்தில் விடவேண்டும்.)

சுக்லவஸ்த்ர த்வயம் தேவீ கோமளம் குடிலாளகே ।
மயிப்ரீத்யா த்வயாவாணி ப்ரும்மாணி ப்ரதிக்ருஹ்யதாம்
(துர்காலக்ஷ்ம்யை நம: வஸ்த்ரயுக்மம் ஸமர்ப்பயாமி.)

(வெள்ளை உடை தரித்தவளே! சுருட்டை மயிருள்ளவளே! ப்ரம்ம பத்னியே! வாணி தேவியே! அழகிய இரு வஸ்த்ரங்களை என்னிடம் அன்புடன் ஏற்றுக்கொள். பருத்தியால் ஸ்த்ரீகள்

செய்திருக்கும் வஸ்த்ரம் அல்லது புதிய ரவிக்கைத் துண்டை புஸ்தகத்தின் மீது சாத்தவும்.)

ஶப்த ப்ரும்மாத்மிகே தேவீ ஶப்த ஶாஸ்த்ர க்ருதாலயே ।
ப்ருஹ்மஸூத்ரம் க்ருஹாண த்வம் ப்ரும்மசக்ராதிவந்திதே ॥

(துர்க்காலக்ஷ்ம்யை நம: உபவீதம் ஸமர்ப்பயாமி.)

சப்த ப்ரும்ம வடிவமானவளே, சப்த சாஸ்த்ரத்தை வீடாகக் கொண்டவளே, ப்ரும்மா, இந்திரன் முதலியவர்களால் போற்றப் படுபவளே, பூணலை ஏற்றுக்கொள் எனப் புதுப் பூணலை புஸ்தகத் தின் மீது சாத்தவேண்டும். பூணல் கிடைக்காவிடில், உபவீதார்த் தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி என அக்ஷதையைப் போடலாம்.)

ரத்ன தாடங்க கடகம் கேயூர வலயம் ததா ।
ததாமி பூஷணம் தேவி ஸங்க்ரஹாண மஹேஶ்வரி ॥

(துர்காலக்ஷ்ம்யை நம: ஆபரணம் ஸமர்ப்பயாமி.)

(ரத்ன தோடு, காப்பு, வளை, வங்கி முதலிய நகைகளைக் கொடுக்கிறேன். தேவீ! இதை ஏற்றுக்கொள். ஆபரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி.)

ஸீமந்தே தே பகவதி ஸிந்தூரம் ந்யஸ்தம் அம்பிகே ।
பாலதேஶே தவ ப்ரீத்யை காஷ்மீர திலகம் முதா ॥

(துர்க்காலக்ஷ்ம்யை நம: ஸிந்தூரம் ஸமர்ப்பயாமி.)

(பகவதீ! உனது வகுட்டில் ஸிந்தூரம் குங்குமம் வைத்தேன். அம்பிகே! உனது நெற்றியில் கஸ்தூரி, சந்தனப் பொட்டிட்டேன். சந்தன குங்குமம் இடவும்.)

விந்யஸ்தம் நேத்ரயோ: காந்த்யை ஸௌவீராஞ்ஜனம் உத்தமம் । ஸங்க்ரஹாண ஸுரஶ்ரேஷ்டே வாகீஶ்வர்யை நமோஸ்துதே ॥

(துர்க்காலக்ஷ்ம்யை நம; நேத்ராஞ்ஜனம் ஸமர்ப்பயாமி.)

(ஓ தேவரில் சிறந்தவளே! கண் அழகாயிருக்கும்பொருட்டு உனது கண்ணுக்கு சிறந்த மையிட்டேன். வாகீச்வரீ! உனக்கு

நமஸ்காரம். மையிடுவதாய் மனதில் நினைத்து, 'அஞ்ஜனார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி' என்று அக்ஷதையைப் போடவும்.)

குங்குமா கரு கர்பூரை: யுக்தம் மலயஜம் சுபம் ।
கந்தம் க்ருஹாண தேவேஶி வீணா புஸ்தக தாரிணீ ॥

(துர்க்காலக்ஷ்மியை நம: கந்தான் தாரயாமி)

வீணை, புஸ்தகம் இவைகளைத் தரிக்கும் தேவேசி! குங்குமப்பூ பச்சைக்கற்பூரம் இவை கலந்த சிறந்த சந்தனத்தை ஏற்றுக்கொள்ளும். சந்தனமிடவும்.)

அக்ஷதான் தவளான் திவ்யான் குங்குமாக்தான்சுபானனே
பக்தானும் ஸித்திதே தேவி ஸங்க்ரஹாண மஹேஶ்வரீ. ॥

(துர்க்காலக்ஷ்மியை நம: அக்ஷதான் ஸமர்ப்பயாமி.)

(பக்தர்களுக்கு சித்தியைத் தரும் மஹேச்வரீ! வெளுப்பானதும், குங்குமம் பூசியதுமான சிறந்த அக்ஷதைகளை ஏற்றுக்கொள்ளும். நுனிமுறியாத முழு வெள்ளை அரிசிகளைப் பொறுக்கி குங்குமத்துடன் நெய்விட்டுக் கலந்தால் அதுதான் அக்ஷதை எனப் படும். முறிந்த பாதி அரிசியுடன் மஞ்சள்பொடி ஜலம் கலந்து செய்வது உசிதமல்ல. அக்ஷதை அல்ல க்ஷதை அது.)

புன்னாகைர் ஜாதி குஸுமை: மந்தாரை: பாரிஜாதகை:
கரவீரை: மனோரம்யை: வகுளை: கேதகை: சுபை: ।
நீலோத்பலைஶ்ச கல்ஹாரை: அம்லானைஶ்ச மஹேச்வரி
கல்பிதானி ச மால்யானி க்ருஹாண அமரவந்திதே ॥

(துர்க்காலக்ஷ்மியை நம: புஷ்பமாலாம் ஸமர்ப்பயாமி.)

(புன்னாகை, ஜாதி புஷ்பம், மந்தாரம், பாரிஜாதம், அழகிய அரளி, மகிழம்பூ, அழகிய தாழம்பூ, நீலோத்பலம், செங்கழுநீர்ப்பூ முதலிய வாடாத புஷ்பங்களாலாகிய மாலையை, அமரரால் நமஸ்கரிக்கப்பட்டவளே! ஏற்றுக்கொள்ளும்.)

அங்கபூஜை: புஸ்தகத்தைக் காகித வடிவமாக எண்ணாமல் நேரே ஸரஸ்வதி தேவி (முன் த்யானத்தில் கூறியபடி)

